# கண்ணபுரத் தாயார் கனு

[புருஷகார வைபவம்]



ஆக்கம், குறிப்புரையுடன்

T. S. ராஜகோபாலன், பி.ஏ., எல்.டி.

தலைமை யாசிரியர், இந்து உயர்நிலைப் பள்ளி

திருவல்லிக்கேணி, சென்னை-5

# கண்ணபுரத் தாயார் கனு

[புருஷகார வைபவம்]

ஆக்கம், குறிப்புரையுடன்

T. S. ராஜகோபாலன், பி.ஏ., எல். டி.

*தலைமை யாசிரியர், இந்து உயர்நிலைப் பள்ளி*

*திருவல்லிக்கேணி*

திருவல்லிக்கேணி

பங்குனி உத்திரம்

1964

# முன்னுரை

கருணையங் கடலான இறைவன், உலகைப் படைக்கும் போது, மக்கள் நன்னெறியிற் படிந்து உய்வதற்கெனவே வேதசாத்திரங்களை வெளியிட்டான். பலபடிகளாலே மக்கள் கலக்கமுற்றுத் தம் நிலையை யறியாமற் பிழைசெய்து, பின்னர் வருந்தும்போது, இறைவனை அடைந்து தம் பிழையைப் பொறுக்குமாறு இறைஞ்சத் தயங்குவர். இயல்பாகக் கருணை கொண்டவனாயினும் இறைவன் நிக்ரஹ அநுக்ரஹங்கள் (கடிவது, அருள்செய்வது) இரண்டும் படைத்தவன். தான் வெளியிட்ட சாத்திரங்களைப் புறக்கணித்துப் பிழை செய்வோரை இறைவன் கடிந்து தண்டனை விதிக்க விரும்புவான்; இந்த நிலையிலே இவனது திருமார்பில் வாழும் பிராட்டி, இவனையும் மக்களையுந் திருத்தி இணைத்துவிடுவாள். "இறைவனைச் சரணமாகப் பற்றுவீர்" என்று மக்களுக்கு உபதேசஞ் செய்வாள். தனது நாயகனை நோக்கி, "இவர்களிடம் தாங்கள் குற்றங்களை ஆராய்வது மணற்சோற்றிற் கல் ஆராய்வது போலாம். சாத்திரங்கள் பொய்யாகலாகாது என்று தாங்கள் கருதலாம்; இந்தச் சாத்திரங்களே தங்களுடைய கருணையை எடுத்தியம்புகின்றன; ஆகலின் தாங்கள் கருணையே காட்டுவது ஏற்றதாகும். இரண்டு வகையிலும் சாத்திரங்கள் பொய்யாகாதவாறு ஓர் உபாயம் உரைப்பேன், கேண்மின். தங்களை அணுகாதார்க்குத் தாங்கள் தண்டனை விதிக்கலாம்; தங்களை அண்டினவரிடம் தாங்கள் கருணையைக் காட்டவேண்டும்" என்று உபதேசஞ் செய்வாள். இந்த உபதேசம் பயன் பெறுமற் போனால், தன் நாயகனைத் தனது அழகாலே தன் வயமாக்கிக் கொள்வாள். இங்ஙன் இவள் இறைவனை அள்ளி வழங்கும் வள்ளலாகச் செய்வாள். புரு ஸநோதி இதி புருஷ: புருஷம் கரோதி. புருஷன் என்ற சொல்லின் பொருள் "அள்ளி அளப்பவன்" என்பதாம்; இறைவனை இவ்வாறான

பண்புடையவனுகச் செய்வது புருஷகாரம்; இவ்வாறு செய்பவள் பிராட்டி.

திருககண்ணபுரத்திலே கண்ணபுரத் தாயார் என்ற திருநாமத்துடன் உறையும் பெரிய பிராட்டியார், தைத் திங்கள் இரண்டாந் திருநாள் கனு உலா எழுந்தருள்வது, புருஷகாரத்தை வெளியிட என்பது இந்நூலின் கருத்து புருஷகாரம் கொளவார்பால் வேண்டுவன க்ருபை (கருணை), பாரதந்த்ர்யம (இறைவனை அண்டியிருத்தல்), அநந்யார்ஹத்வம் (வேருெருவர்க்கு உரிமையின்மை) என்பன. இறைவனது கருணைபோன்றதன்று, இவளது கருணை, இறைவனது க்ருபை அவனது ஸ்வாதந்த்ர்யத்தாலே அமுக்குண்டு கிடந்து ஓரொருகால தலையெடுப்பதாம்; இவள் அநுக்ரஹ சீலையாகையாலே, இவளது கருணை எப்போதும ஓங்கி நிற்கும் மக்கள் வாழ்வதற்கெனவே மண்ணில் அவதாரங்கள் செய்தது இறைவனது கருணையின் விளைவாகும். இவன் பிறக்கும்போதெல்லாம் இவனுடன் தானும் பிறந்து மக்களை உய்வித்தது பல வகையாக எடுத்துக் காட்டப்பெற்றுள்ளது இந்நூலில். இறைவன் அர்ச்சை நிலையிலே கோயில் கொண்ட திருக்கண்ணபுரத்திலும் எழுந்தருளியிருக்கும் பெரிய பிராட்டியார் புருஷகாரம் செய்யும வகை விவரம் பெற்றுள்ளது.

இந்நூலின்கண் பொருந்தும் பொருளின் சுருக்கம: வைகுந்தத்தில் மன்னும் இறைவன் தன் கருணையாலே உலகம உய்யப் பல அவதாரங்கள் செய்து, அவதாரங்களுக்குப் பிற்பட்டவராகிய நாமும் உய்யப் பல தலங்களிலே அர்ச்சையில் எழுந்தருளியுள்ளான் இபபதிகளுள் மேம்பாடு கொண்ட திருக்கண்ணபுரத்திலே தைத் திங்கள் இரண்டாந் திருநாளிலே பிராட்டி மங்கல நீராடிக் கனுவுலாவாக உட்சுற்றிற் காவணத்தில் திருச்சிவிகையில் எழுந்தருளும்போது இவளது புருஷகாரச் செயல்களைப் பலர் போற்றுகின்றனர். சானகிப் பிராட்டியாராகச் சிறையிலிருந்து பகைவர்க்கும் அருள் செய்தமையை அமர மகளிர் துதிததலைக் கேட்ட இறைவன் சௌரிராசன, முன்பு தான் சானகியைப் பிரிந்ததை

நினைந்து, பிராட்டி எழுந்தருளும் பந்தரில் விரைந்து எழுந்தருளி இவளது எழிலிலே ஆழ்ந்தான். இவர்கள் இருவரும் ஒருவரை யொருவர் கூர்ந்து நோக்குதலும், மக்களைப் பிராட்டி நோக்குதலும் புருஷகாரத்தின் பிற்பகுதியை வெளியிடுவதாகும். அஃதாவது, இறைவனுக்கு இவள் உபதேசஞ் செய்த பின்னர், இவனது மனத்தில் இஃது எவ்வாறு படிந்துள்ளது என்பதை ஆய்வதற்குப்போல் இவள் மக்களிடம் சில குறைகள் உள்ளனவாகக் கூறுவாள் ; இறைவனோ என்னில், "என்னடியார் அது செய்யார், செய்தாரேல் நன்று செய்தார்" என்பான். ஆக, மக்கள் தம்மைக் காப்பதற்குப் பிரானும் பிராட்டியும், "நான், நான்" என்று இங்ஙனம் முந்துவதை நினைந்து மகிழ்வர்.

தென்னாட்டிற் பெண்டிர் கனுக் குளித்தலை எவ்வாறு கொண்டாடுகின்றனர், இதன் நோக்கம் யாது என்பன இத்திருநாள் வரலாற்றிலே காணலாவன.

**ஆசிரியன்**

வேலை பயநத வளையும், உயர்தணடும்,
கோல வரிசிலையுங கோலுங கரஙகொண்டு
தானமர்நது, பொன்னஞ் சிறையான புறஙகாப்பத்
தானைத் தலைவன் பணிகேட்ப, மீபபரந்த
மாகம் புரநதுகந்து மனனப், புவனத்தே
ஆகம படைதெழுந்தோர் ஆழி நெடுந்திரைபோல
ஓவா துலைககுந் துயாதன்னின ஓககத்தால
ஆவா வெனபபதைபப அந்நிலையைத் தானோர்நது,
மீனாயோா ஆமையதாய வெண்மருபபின் ஏனமதாயக்
கானாருஞ சீயமதாய வாமனனாயக, காய்ந்தெழுந்து
பேரரசை மூவெழுகால் கூர்மழுவால் பேர்த்தெறிநத
பேரரியாயப பினனும் தயரதனார் பெற்றெடுத்த
செல்வத் திருமகனாயச் சீராராய்ப பாடியிலே

---

*ஆரங்கள் உள. ஆழி=சக்கரம். தனிப்படை=ஒப்பில்லாத ஆயுதம் (ஸுரத்விஷாம் ப்ராண-விநாசி). வேலை பயந்த வளை =கடலிற் பிறந்த பாஞ்சசன்னியம. தண்டு=கதை. கோல= அழகுள்ள. கோல்=செங்கோல். பொன்னஞ்சிறையான்= பொன் மயமான அழகிய சிறகுகளையுடைய கருடன் (ஸுபர் ணன்) தானைத்தலைவன்=சேனாபதியாழ்வான். மீப்பரந்த= த்ரிபாத்விபூதி என்று பெயருள்ள பரந்த நித்யவிபூதி. மன்ன= அங்கே பொருந்தியிருக்க.*

***15-18- உலகங் காப்பவன்.*** *புவனம்=பூமி. ஆகம்=உடல். ஆழி=கடல். ஓவாது=இடையறாமல். உலைக்கும்=மனத்தை வாட்டும் ஒக்கம்=மிகுதி, ஆ ஆ எனப் பதைப்பர் மக்கள் ஓர்ந்து=நனகு அறிநது (தேசாந்தரத்திலுள்ள மகனை நினைந்து தந்தை ஏங்குவதுபோல் ஏங்கி)*

***19-28- எடுத்த அவதாரங்கள்.*** *ஓர் ஆமை=ஒப்பற்ற வடிவையுடைய ஆமை. வெண் மருப்பின ஏனமதாய்=வெள்ளை யான கொம்புகளை உடைய வராகமாய் (நீலவரை இரண்டு பிறை கௌவி நிமிர்ந்த தொப்பக கோலவராகமொன்றாய்). சீயம்=சிங்கம். காய்ந்தெழுந்தது பரசுராமன் (பேரரி).*

மல்குந் தனியமுதாய், அவ்வமுதும் வந்திக்கும்
முன்னவனாய்ப், பார்தன்னில் மொய்க்குங் கலிதன்னின்
மன்னுந் திறலழிய மாவி னுருக்கொண்டு
என்று மிருநிலத்தோர் ஏமம் மிகக்கருதிப்
பொன்றாக் கருணையதாற் பல்லுருவந் தானேற்று
நன்னெறியோர் தாம்வாழ நண்ணாதார் தாமவிய
மன்னும் அகலிடத்தே வந்துகந்தான் மாதவனும்—
பின்னானோர் தாம்வாழப் பேரருளால் தாரணியில்
மன்னுந் தமிழகத்தும் மற்றுந் தலந்தோறும்
நின்று மிருந்துங் கிடந்தும் நடந்துந்தன்
குன்றா நலனுங் குறைவதுபோல் தானுறைந்தான்—

*மூவெழுகால்=இருபத்தொரு முறை. மழு=பரசு. பேர் அரி=க்ஷத்திரியர்களும் நடுங்கும் விரோதி. செல்வத் திருமகன்=இராமன் (பாராளும் படர் செல்வம் படைத்தவன்). சீரார் ஆய்ப்பாடி=பசுக்கள் மலிந்திருப்பதால், நெய், பால் இவற்றால் குறைவில்லாமல் சீர் நிறைந்துள்ள திருவாய்ப்பாடி. தனி அமுதாய்=கண்ணனாய். வந்திக்கும்=வணங்கும். முன்னவன்=பலராமன் (நம்பி மூத்தபிரான்). திறல்=வலிமை. மா=குதிரை (கற்கி). ஏமம்=காப்பு. பொன்றா=குறையாத. பல்லுருவம்—"எந்நின்ற யோனியுமாய்ப் பிறந்தாய்" என்றவாறு.*

***29-30- அவதாரத்தின் நோக்கு.*** *நன்னெறியோர்=நல்ல நெறியையுடைய பெரியோர்கள் (பரித்ராணாய ஸாதூநாம்). நண்ணாதார்=பகைவர் (விநாசாய ச துஷ்க்ருதாம்).*

***31-34- அர்ச்சாவதாரம்.*** *பின்னானோர்=அவதாரத்திற்குப் பிற்பாடரானவர்கள். தாரணி=பூமி. மன்னும் தமிழகம்=பெருமையுடன் விளங்குந் தமிழ்நாடு. மற்றுந் தலந்தோறும்=மற்றை இடங்களிலே உள்ள திவ்ய தேசங்களிலும். நின்றும் ...நடந்தும்=சில தலங்களிலே நின்ற திருக்கோலத்திலும், சில தலங்களிலே வீற்றிருந்த திருக்கோலத்திலும், சில தலங்களிலே சயனத் திருக்கோலத்திலும், மற்றுஞ் சில தலங்*

இப்பதிகள தம்முள எடுததோதும் மேனமைததே
செபபரு செழித்தோஙகுரு சோழ வளநாட்டில்
பொன்னைக கொழிததோடும பொன்னிக கரையதனில
துனனு சுரும்பினமுந தோகை மயிறகணமும்
காரார் முகிலநிரையுங கோகிலமுந தாஞசேரும்
ஏரார் பொழிலவாய எயிலசூழ புரமாகும—
முனனொருகால வானோர் முறைகேட்டு மாவலிபால
தன்னை மிகவொடுககித தானேறறான மூவடிமண்,
பின்னும்மே லிநதிரறகுப பின்னவனாயப பேராழி
மினன விலஙகல் கடிநதான, வலியரககா

களிலே உலகளந்த திருக்கோலத்திலும் அமர்ந்து. குன்றாத நாயகம = "ராஜாதிராஜஸ் ஸர்வேஷாம" என்றபடி மண்ணுககும விண்ணுக்கும் தனிநாயகனாயிருககை. குறைவது போல = ஸர்வசக்தனாயிருந்தும அசக்தன்போல் அர்ச்சையில் விளங்குகிறான்.

***35-40- இப்பதிகளுள் திருக்கண்ணபுரத்தின் மேன்மை.*** செப்பம் = செம்மை, சோழநாட்டின் தனிப்பண்பு பொனனி = காவிரி. துன்னு = நெருங்கியுள்ள. சுரும்பு = வண்டு. முகில் நிரை = மேகங்களின சமூகம். கோகிலம் = குயில். பொழில் வாய = பொழிலுள அமைந்துள்ள (பொழிலுக்கு அணிபோன்றுள்ளது) எயில = மதிள் (நம்மாழ்வார் அருளியவாறு பல வகை மதிள்களால் சூழப்பட்டது இப்பதி).

***41-42- வாமனனாய் அவதாரஞ் செய்தது.*** தன்னை மிக ஒடுக்கி = "பேர் வாமனன்," "மாணிக் குறள்" என்றவாறு, வாமனர்களும் இவனைக் கண்டு வாமனன என்னக்கூடிய வடிவம் ஏற்று.

***43-44- உபேந்திர அவதாரம்.*** மேல = வானவர் கோனாக வுள்ள மேன்மை கொண்ட. பின்னவன் = தமபி பேர் ஆழி = பெரிய சக்கராயுதம். மின்ன = ஒளி எங்கும் மினனுமாறு. விலங்கல = மலைகள (சிறகு முளைத்துப் பறந்து திரிந்த மலைகளின் சிறகுகளைத் துணித்தான்).

வீயச் சரம்பொழிந்து மெல்லியலாள் தோள்தோய்ந்து
தூய மனம்வாய்ந்த வீடணற்காத் திங்களிருள்
நாட்பகலே நாற்பால் நடைகாட்டுஞ் சீலத்தான்,
வாட்டமிலா வல்லசுரர் மாய்ச் சிறைதன்னில்
நள்ளிருளில் தோன்றி நலங்கொள் மனத்தவர்தம்
உள்ளங் களிகூர, உம்பர் தொழுதேத்தக்
குன்று குடையாக் கவிழ்த்துக் குழலூதிக்
கன்றின் கணம்மேய்த்து வேர்த்துக் களைதீர
நாடி நிலைகொண்டான் நற்பதியாம் நானிலத்தில்
ஈடில்சீர்க் கண்ணபுர மென்றே புகழுடைத்து—

*45-47- இராமாவதாரம். வீய=கூடாக அவியுமாறு. சரம் பொழிந்து="சரவர்ஷம் வவர்ஷ ஹ" என்று வியக்குமாறு தாழாதே சரம் பொழிந்து. மெல்லியலாள்=சானகிப் பிராட்டியார். திங்கள் இருள் நாள் பகலே=மாதந்தோறும் அமாவாசையன்று நடுப் பகலில் (விபீஷணனுக்கு நடையழகைக் காட்ட மாதந்தோறும் அமாவாசையன்று நடுப் பகலில் எழுந்தருள்கிருன்). நாற்பால் நடை-சதுர்கதி: என்றவாறு. சீலத்தான்= தாழ்ந்தோருடன் இயல்பாகப் பரிமாறும் பண்பினன்.*

*48-54- க்ருஷ்ணவதாரம். வாட்டமிலா=என்றும் அழியாத. நள் இருளில்=நல்ல இருட்டிலே (ஒப்பற்ற சுடர், இருளிலே தோன்றியது). நலங்கொள் மனத்தவர்=நல்ல மனம் வாய்ந்த பெரியோர். களிகூர=மகிழ. உம்பர்=நித்யஸூரிகள் ("எத்திறம்" என்று இவனது ஸௌலப்யத்தையும் ஸௌசீல்யத்தையுங் கண்டு வியந்தனர்). வேர்த்து களை தீர=வெயிலிற் கன்றுகள் மேய்ப்பதால் வேர்த்து, களைப்பு தீருவதற்காக (மெய்யடியாரை நாடி நடந்த களைப்பு தீருவதற்காக). நாடி= சோலை வாய்ப்பைக் கண்டு, "களை தீர இதுவே ஏற்ற இடம்" என்று விரும்பி. நற்பதியாம்=நற்பதியாகிய இது. ஈடில் சீர்= ஒப்பில்லாத சீரையுடைய. ("கன்றுமேய்த் தினிதுகந்த காளாயென்னுங் கடிபொழில்சூழ் கணபுரத்தென் கனியே என்னும்" என்பது ஈண்டு நோக்கு).*

மேலுந் தலமும், வனமும, வருபுனலும்,
வேலை, புரமுந், தடமும, விமானமும்
என்றேழ் நலங்கொணடு நாரணனசீர் மநதிரததில்
ஒனறெுன் றெழுத்தாய் ஒளிகொளளும் எண்பதியின
சீாதிகழு மெடடெழுத்தின் சீரிலங்கு மிப்பதியில
ஏர்திகழும் பொன்னூர் விமானத்துள, ஆஙகொருபால
பூமகளும், பூபாலன் பொன்மகளும தாமஙிறபக
காமா் கலனணிந்த நீளையுடன் பைங்கமலத்
தாரான் நுடங்கிடையும் மறறொருபால் சார்ந்தருளச்
சீராா சிறையுவணன் கைகுவிக்க, மற்றொருபால
தண்டகக் கான்வாழ் தவமுனிவன் தாளபணிய,
அண்டம் முழுதேத்த அம்பொற் றிகிரியுடன
பால்கொண்ட வொண்சஙகுங கோலுங் கரமேந்திச

***55-59- சீருக்குக் காரணங்கள்*** *ஏழ் நலம் கொண்டு— க்ஷேத்ரம், வனம், ஆறு, கடல், புரம், புஷ்கரிணி, விமானம் என்ற ஏழும் ஒருங்கே அமைந்துள்ளதால் ஸப்த - புண்ய-ஸ்தலம் என்ற பெருமையை ஏறறு. நாரணன் சீர் மந்திரத்தில. - திருமந்திரத்தில் உள்ள எட்டு எழுததுக்களில் ஒவ்வொனறுமாய் விளங்கும் எட்டுத் திருப்பதிகளின் பெருமை யாவும் ஒருங்கே வாயநத பெருமை இந்தத தலத்திற்கு உண்டு*

***60-67- ''தேவிமாராவார் திருமகள் பூமி ஏவ மற்றமரராட்செய்வார்'' என்ற கணக்கிலே ஸ்ரீவைகுண்டததில் இருப்புப போலே இங்குமுள்ள இருப்பு*** *பூபாலன் பொன்மகள்= உபரிசரவஸு என்ற மன்னனின் பெண்ணாகிய பத்மினிப் பிராட்டியார் காமர்=அழகுள்ள. கலன் அணிந்த=ஆபரணங்கள் சூடிக்கொண்ட பைங்கமலத் தாரான்=பெரியாழ்வார். நுடங்கிடை=சுருங்கிய இடைவாய்ந்த ஆண்டாள். உவணன்=கருடாழ்வார். தண்டகக் கான் வாழ் தவமுனிவன்=தண்டக ரிஷி. அம்பொன திகிரி=பொன்மயமான சக்கரம். பால்கொண்ட ஒண் சங்கு=பால்போல் வெளுத்த சங்கு. கோல்=செங்கோல்.*

சேல்கொண்ட நீள்தடத்தின் செவ்விதழ்த் தாமரைபோற்
சேவடியுங் கையுங் செவியணுகு கண்ணிணையும்
மூவுலகுங் காக்கும் மணிமுடியும், மொய்மலரார்
தொங்கல் திருமார்பிற் சேருங் கவுத்துவமும்
பொங்கிப் புகர்சொரியும் மாமணியின் தாவடமும்
கண்டவர்தம் கண்கவரக், காம னுளங்கவரும்
கொண்டற் கருமேனி காட்டித் திகழ்வான்றன்
வண்ணப் பவனத்துள் மன்னு மெழில்கொண்ட
விண்ணிற் பொலியும் விமானத்திற் செம்பொன்னால்
ஆய தவிசின்மேல் தானமர்ந்து பேரருளால்
பாய அகலிடத்தைக் காக்கும் பரிவுடையாள்,
சீலத்தாள், செங்கமலப் பூமேயாள், மாமாயன்
நீல மணிமார்பில் நீங்காமல் தோய்ந்திடுவாள்,

***68-74- பெருமானின் பேரெழில்.*** *சேல்கொண்ட......கண்ணிணையும்=தாமரைபோல் மெல்லிய (சிவந்த) திருவடிகளும், கைத்தலமும், திருக்கண்களும். மூவுலகும் காக்கும் மணிமுடியும்=மூவுலகுக்கும் நாதன் என்பதைக் காட்டுவதுபோல் உயர்ந்த மணிமுடியும். மொய் மலர் ஆர் தொங்கல் திருமார்பில்=வண்டுகள் நிறைந்த மலர்களாலாகிய திருமாலை சேருந் திருமார்பில். பொங்கிப் புகர் சொரியும்=மணிகளின் ஒளி பொங்கிப் பக்கத்தில் பரவும். காமன் உளங்கவரும்=அழகாலே; "ஸாக்ஷாத் மந்மத - மந்மத:", "காமன்றன் தாதை கண்ணபுரத்தெம்பெருமான்" என்பன காண்க. கொண்டல்=மேகம்.*

***75-80- பிராட்டி எழுந்தருளியுள்ள விமானம் ; அவளது நற்பண்புகள்.*** *வண்ணப் பவனம்=பலவகையாலும் அழகு மிக்க திருக்கோயிலிலே. மன்னும் எழில் கொண்ட=என்றும் நீங்காத அழகு வாய்ந்த (பிராட்டியின் அகலகில்லேன்போல). விண்ணிற் பொலியும்=வானில் ஓங்கி விளங்கும். தவிசு=ஆசனம். பாய=பரந்த. சீலத்தாள்=இறைவனைப் போலே சீல குணம் வாய்ந்தவள். நீங்காமல் தோய்ந்திடுவாள் - "அகலகில்லேன் இறையும்" என்றவாறு.*

மானப புகழ்கொணட மனனன் சனகனறன
கூனன மழுச்சாலில தோனறிக் கொழுநறபின
வெஙகானம் சாயைபோல தானடநதாள்-மேலொருநாள
பொஙகும புகழ்வாய் விதாபபன குலவிளககாயச
செங்கமலக கணணனை செம்பவள வாயானை 85
செங்கமல நாபனைச சேணிவந்த சேயானை
வானுறையும முன்னவனை வைய முயவநத
கோனவனைத தானநினைநது நைந்துருகிக் கோதிலலா

*81-83- இறைவனைவிட்டுப் பிரியாமைக்கு எடுததுக் காட்டு* மானப்புகழ் கொண்ட சனகன்=பெருமபுகழ்வாய்ந்த சனகன, "ஜநகாநாம் குலே கீர்திம் ஆஹரிஷ்யதி மே ஸுதா" (ஜனகர் குலத்திறகே பெருமை கொண்டு வருவாள் என பெண்" என்ருன் ஜனகன்). கூன் நன் மழுச் சாலில தோன்றி- இராமனைப்போல் ஒருத்தியின் வயிற்றில பிறந்தவள் அல்லள். கொழுநன்=கணவன், "ஸஹதர்மசரீ தவ" (உன்னுடைய தர்மத்தைப் பின்பற்றுபவள்) என்ருன் ஜனகனும். வெங்கானம் சாயைபோல தான் நடந்தாள்=கொடிய கானத்திலும் இராமனைவிட்டுப் பிரியாமல் அவனது நிழற்போல நடந்தாள்; "எவ்வாறு நடந்தனை?" என்று தசரதன இராமனைப்பற்றிக் கலங்கியதுபோல, இராமனும் இவளைப்பற்றிக் கலங்குமாறு, "மெல்லடிகள் குருதிசோர" நடந்தாள்

*84-85- விட்டுப் பிரியாமைககு வேருேர் எடுததுக் காட்டு.* குல விளக்காய் - தானும் ஒளிகொண்டு, பிறர்க்கும் ஒளி கொடுக்கும விளக்குப்போல் (குலத்தையும் குவலயத்தையும் உய்விக்கும விளக்கு)

*85-88- ருக்குமிணிப் பிராட்டியாரது மனம் இவனை நாடிய தற்குக் காரணங்கள்.* செங்கமலநாபன்=உலகுக்குக் காரணன். சேண் நிவந்த சேயான=தனனுடைமையைப் பெறுவதற்காகக் காடு மேடு முதலியவற்றில கால்வைத்து அளந்து கொண்ட அழகியான். வான உறையும் முன்னவன்=வானுளார் பெருமான். வையம் உயவந்த கோனவன்=உலகு உய்வதற்குத் தன்னைத் தாழவிட்டுக்கொண்டுவந்த பெருமான்.

மாமறையோன் தன்பாலே தன்னிலையைத் தானோதி
வாய்புகழா ளந்தரியின் மந்திரத்தில் தான்தோய்ந்து
வாம நெடுந்தேரில் வந்துகந்த மாயன்றன்
வாமப் புயந்தோய்ந்தாள்—வற்றாக் கருணைத்தண்
வாரிதியான் தோன்ற உடன்தோன்றி அக்கருணை
வாரிதியே கூவமதாய்ச் செய்யுந் தனிக்கருணை
வாய்ந்தாள், புவியோர் புகலாவாள், மற்றுந்தன்
வாய்ந்த வலக்கை அபயங் குறிப்ப,
இடக்கை எவரேனும் ஏர்மலர்த்தாள் நாடில்
இடர்போ மெனக்காட்ட ஈடில் புகழ்கொண்டாள்—

***89-90- இவனைப் பெற இவள் செய்தது.*** *கோதில்லா= குற்றமில்லாத (மறையுடன் இயைக்க; விசுவாமித்திரன்போல் இருவரையுஞ் சேர்த்துவைத்தான், உலகுய்ய.) வாய்புகழாள் அந்தரி=கண்ணனுடன் தோன்றியவள் என்ற புகழ்பெற்ற துர்கை. மந்திரம்=கோயில்.*

***91-92-முயற்சியின் பலன்.*** *வாம=அழகிய. வந்துஉகந்த= வந்து இவளைப் பெறுவது தன் பேறாகக் கருதியதால், மகிழ்ச்சி கொண்ட. வாமப் புயந்தோய்ந்தாள்- மார்பில் சேருமவள் முதலிற் பெற்ற பரிசு.*

***93-98- தனிக் கருணை வாய்ந்தவள்.*** *வரம்பு இல் கருணைத் தண் வாரிதியான் -வரம்பில்லாத அருளை, குளிர்ந்த நீர் வாய்ந்த கடல்போல் கொண்டவன் (கருணைக் கடல்). உடன் தோன்றி - இவன் பிறந்த பிறவிகளில் தானும் பிறந்து ("ராகவத்வே அபவத் ஸீதா, ருக்மிணீ க்ருஷ்ணஜந்மநி" என்றவாறு). அக்கருணை வாரிதியே=கடல்போன்று பரந்த கருணையும். கூவமதாய் = கிணறுபோல் (செய்யும்). புவியோர் புகலாவாள்=பூமியில் வாழுமவர்க்குக் கதியாவாள். வாய்ந்த வலக்கை=அபயங் காட்டுவதே பயனாக வாய்ந்த வலத் திருக்கை. எவரேனும்="யதி வா ராவணஸ் ஸ்வயம்" என்றவாறு இராவணன் போன்ற பாவியும், காகாஸுரன் போன்ற தீயோனும். ஏர் மலர் தாள் நாடில்=இவளது திரு*

தையின் முதலதனிநாள தாரணியில தாம்பெருகும்
வையை, பொருநல், வளஙகொழிக்குங காவேரி,
பெண்ணை, புனலதுங்க பததிரை, பாலாறு,
விண்ணின றிழிந்த வரநதி யெனறிவையும்
புண்ணிய நீர்சசுனையும பொயகைத துறைபலவும
மண்ணவர்தம் பாறகழிதத மாசுப பொதியனைதகும்
நீங்கத திரண்டடையத் தாமபெறற பேரருளால்
ஓஙகும் புகழ்கொணட பிற்றைநாள ஆங்குறைய,
முப்பத்து முக்கோடி தீர்த்தத்தின் சீர்கொண்ட

*வடிகளே சரணம என்று அடைந்தால ஈடில் புகழ்கொண்டாள்="தவ அஸ்மி" என்று சொலலவேண்டும் என்றான் இராமன், இவள் காலைக் காட்டுகிறாள்*

***99-105- தையின் முதல் நாளிலே புஷ்கரிணியின் பூம்புனலின் பெருமை.*** *முதல தனி நாள் - மக்களின் பாவங்களைப் போக்கப் பிரானும் பிராட்டியும் தான் தான் என்று முனைவது போல, இவர்களது திருவடிவாரத்திலுள்ள புஷகரிணியும் புனித நீர் கொண்டுள்ளது, இவர்களது பாவச் சுமையை நீக்க. பொருநல்=தாமிரபருணி, புனல் துஙகபத்திரை=தணணீர் வாய்ந்த துங்கபத்திரா நதி விண்ணின்று இழிந்த ..—இறைவனது திருவடிகளைப் பிரமன் விளக்கிய நீர் ஆகாயத்திலிருந்து கங்கையாகப் பாய்ந்து பகீரதனால் கொண்டுவரப் பட்டது. நீர்ச்சுனை - சுனைகள். துறை பலவும்=புனித நீர் வாய்ந்த துறைகள பலவும். தம்பால் கழித்த=நீராடித் தம்முடைய பாவங்களையும் மாசினையும் மண்ணவர் கழிப்பதால இபபாவங்களைச் சுமந்து செல்லுகின்ற இந்த நதிகள். திரணடு அடைய=எல்லா தீர்த்தங்களும ஒன்று கூடிப் புஷகரிணியிற் சேர, மக்கள் இறைவனது இணையடிகளைக் காணக் கோயிலில் திரளவதுபோல், இவை இவனது திருவடி வாரததிலுள்ள புஷ்கரிணியில் கூடி விழாக் கொண்டாடுகின்றன.*

***106 - 114- திருமஞ்சனத்திற்காகச் செய்தவை.*** *ஓஙகும் புகழ் கொண்ட பிற்றை நாள்=மக்கள நீராடி மனத்துள்*

ஒப்பில் புனல்தோயும் புட்கரணித் தீர்த்தமதை
ஏமக் குடம்மடுத்துத் தேமாவின் இன்தளிரை
சேம முறப்பெய்து செம்மொழிவாய் வேதியர்கள்
வீதி வலம்வந்து மஞ்சனமா மண்டபத்தில்
வேத மொலித்து விதிவாய் வழுவாமே,
வண்ண மணிச்செப்பில் மான்மதமுஞ் செஞ்சாந்தும்
சுண்ணமுடன் தூய தொடையல் கரமேந்திப்
பொங்கும் பரிவால் உபநிடதந் தாமோதி
மங்கல நீராட்ட நீராடி, மாமலராள்
பட்டுக் கலையுடுத்து வாசங் கமழ்குழலில்
மட்டில் மணங்கொள் அகிலின் புகையூட்டிக்
காதணுகுஞ் சேல்கண்ணில் மங்கலமா மைதீட்டிப்
போதனைய பஞ்சடியிற் பஞ்சின் குழம்பணிந்து,

நினைப்பன பெறுவர் என்று உலகம் புகழும் புகழ் கொண்ட இரண்டாவது நாள். ஏமம்=ஹேமம், பொன்னாலான. மடுத்து=நிரப்பி. சேமம் உறப் பெய்து=க்ஷேமத்திற்கு அறிகுறியாதலால் இளந்தளிரால் மூடி. செம்மொழிவாய்=செம்மையான வார்த்தைகளையுடைய (கலைவலவர்கள், வாய்நல்லார் இவர்கள்). விதியாய் வழுவாமே=செய்வன குறையில்லாமல் செய்து. வண்ண=அழகிய. மான்மதம்=கத்தூரி. செஞ்சாந்து=சிவப்புச் சந்தனம். சுண்ணம்=மஞ்சட் பொடி. தொடையல்=மாலை.

***115-124- திருமஞ்சனம் கொள்ளலும் பின்பு திருவாபரணங்கள் அணிந்து கொள்ளலும்.*** மட்டில் மணங்கொள்=அளவில்லாத மணமுடைய (அகிலின் புகையை, மணங்கமழுங் குழலுக்கு ஊட்டியது, வழக்கத்தைப் பற்ற, குழலுக்கு வாசம் ஊட்டுவதற்கன்று). மங்களமா மை தீட்டி=இவள் "மையார் கருங் கண்ணி"யாகையாலே மங்களமாக மையைத் தீட்டிக் கொண்டாள். போதனைய பஞ்சடியில்=தாமரை மலர்போல் மெல்லியனவும் சிவந்துமுள்ள திருவடி

மின்னிடைமேல மேகலையும் முனகையிற சூடகமும
சென்னிக கருங்குழலமேற சுட்டியும பொன்வடமும
காந்தள விரலுககு மோதிரமும எனறனைய
ஆயநத அணிகலனகள பூணடு—மருஙகெஙகும்
விஞசை யமரா் கருடா் இயககருடன
கொஞ்சுகுரற கினனரரும கந்திருவா் என்றெனறே
பல்வகை யுமபா படிதோய்நது நிறபசீாச
சொலவல்லார் மாமறையோர் மநதிரததால தோததிரத்தால
ஆர்கலியி னேததக கமலை இனிதமா்நது
சீாநிறைந்த நோக்காலே நோககித் திளைததிருபபாள்—
பினனும்நல லோரையிலே பலலியஙகள தாமமுழங்க
மனனும்மா மணடபததில மற்றும புறசசுற்றில

*களிலே செமபஞ்சின் குழம்பை யணிந்து. மேகலை=இடைக் கட்டு சூடகம்=கைவளை. சுட்டி=நெற்றிச சுட்டி பொன் வடமும்=சுட்டி தாங்கும் வடம் பொன்வடம் குழலில் பொருந்தும் சென்னி=தலை. காந்தள் விரலுக்கு=காநதள் மலாபோன்ற விரல்களுக்கு.*

***125-130- கூடியிருந்தவர்கள்.*** *விஞ்சையமரர்=விதயா தார். கருடர்=இப்பெயர் கொண்ட வானோர். இயக்கர்= யக்ஷர். கந்திருவர்=கநதர்வர். படிதோய்ந்து=பூமியிலே படிந்து, கால் நிலத்தில் தோயாத இவர்கள் பிராட்டியை வணங்கி மேன்மை பெறத் தரையிலே நிறபா. சீர்சசொல் வல்லார்="வாய் நலலார்" எனபது போல. ஆர்கலி=கடல். கமலை=பிராட்டி. சீர் நினைந்த நோக்காலே=இறைவனையும் மக்களையும் தன் நோக்காலே திருத்தும் பண்புடையாள இவள்; மக்களை அருளாலே திருத்துவாள், தன் நாயகனை அழகாலே திருத்துவாள்; ஒனறு சேராத இவ்விருவரையும் நோக்காலே திருத்தி இணைத்துவிடுவாள் இவள்*

***131-140- பிராடடி கனுக் குளிக்க எழுநதருள்வதற்காக எங்கும் அமைந்துள்ள பந்தரின் எழில்*** *ஓரை=முகூர்ததம்;*

நீணிலா முற்றத்தில் எங்கும் நிரையார்ந்து
சேணிவந்த காவணத்திற் சேர்ந்த மலரிணரும்,
ஓங்கு கமுகின் னொளிகொள் குலைபலவும்,
தேங்கின் பசுங்காயும் பாளை குருத்திலையும்,
தேன்பொலியுந் தீங்கனியும், தேமாந் தளிர்க்கொத்தும்
வான்பொலியுங் கற்பகக் காவின் வளங்காட்ட,
வானோங்கு வெள்ளி மதிள்தம்மில் தீபங்கள்,
வானோங்கு பந்தரிலே வந்த இருள்சீய்ப்ப,
நன்பொன்னால் தண்டெடுத்து, நற்பவளக் காலமைந்து,
வெண்முத் தருகணைந்து வேய்மணியா லாங்காங்கே
கற்பகப் பூங்கொத்தாய்க் கண்ணன் வளையதுவாய்ப்
பொற்பமை நேமியதாய் வாய்ந்து புகரோங்க
ஆடகத்தா லாய அணிச்சிவிகை தானேறி,
ஏடமர் கஞ்ச மலரி லினிதமர்ந்து,

*பிராட்டி எழுந்தருளும் முகூர்த்தம் நல்லோரை. பல் இயங்கள்=பலவகை வாத்தியங்கள். நீள் நிலா முற்றத்தில்=பெரும் பரப்பான உப்பரிகை. நிரை ஆர்ந்து=வரிசை வரிசையாக நின்று. காவணம்=பந்தர். சேண் சிவந்த=வானை அளாவும். மலர் இணரும்=பூங்கொத்துக்களும். ஒளிகொள் குலை=கமுகங் குலைகள் சிவந்து அழகைப் பெருக்கும். தேன் பொலியும் தீங்கனி=தேன் நிறைந்துள்ள கனிகள். வான் பொலியும்=வானில் விளங்குகின்ற. வெள்ளி மதிள்—"வெள்ளி யேய்ந்த மதிள்" என்றார், நம்மாழ்வார். இருள் சீய்ப்ப=இருளை அகற்ற.*

***141-146-** பிராட்டி எழுந்தருளும் திருச்சிவிகை (பல்லக்கு). தண்டு=பல்லக்கின் தண்டுகள். கால்=பல்லக்கின் நான்கு கால்கள். வெண்முத்து அருகு அணைந்து=அருகிலே வெண் முத்துக்கள் வேய்ந்துள்ளன. வேய் மணியால்...—மணிகளால் ஆங்காங்கே கற்பகக் கொடியும், சங்கும், சக்கரமும் பொறிக்கப் பெற்றுள்ளன. சிவிகை ஆடகத்தால் ஆயது. ஏடமர் கஞ்ச மலரில்=இதழ் விரிந்த கமல மலரிலே.*

கற்பகப பூஙகொடியோ, காஞசனச சீரிழையோ,
பொறபமைவஞ சிக்கொடியோ, போர இவையெலலாம
ஒப்பத் திகழுந் தனிக்கொடியோ எனறிலஙகும்
ஒப்பில பொலஙகொள் ளுருவம ஒளிகாடட,
மல்லிகையும பாதிரியும் வண்ணக கருமுகையும
முலலை நறுமலரும வேரித தமனகமும்
செஙகுவளை தாழை குருககததி சோநதமைநத
கொஙகுண் கலமபகன வேய்ந்து மிகவிளஙகப்—
பாாவாழ அமரர் பணிவுடனே தண்டேந்தச
சீரா ரடியாாகள் சாமரையுந் தாலச்சீர்
வீசனமும் வீசிக கவிகை எடுத்துயாபப,
மாசில வருணன பணிபப, உரகமெழில்

***147-150- திருமேனியின் அழகு.*** கற்பகக் கொடியோ, பொன்னின் இழையோ, அழகுளள வஞ்சிக் கொடியோ, இவை போன்ற யாவற்றினும அழகு ஒருங்கே வாயந்த ஒப் பற்ற கொடியோ என்று வியப்புறுமாறு அழகு வாய்ந்தது திருமேனி. ஒளி காட்ட=புகரைப் பரப்ப; "அப்ரமேயம் ஹி தத்தேஜ . யஸ்ய ஸா ஜநகாத்மஜா" என்றவாறு நாய கனின சோதிக்கும் இவளது சம்பந்தம் காரணமாயிருபபது காணத்தக்கது.

***151-154- திருக்கழுத்தில் அணிந்த கலம்பகன.*** வேரி= வாசனை மிகுந்த. செங்குவளை=செஙகழுநீர். கொங்கு உண் கலம்பகன=வாசனை மிகுந்த மாலை; இவளது திருமேனியிற் சேர்ந்ததால் இது ஏற்ற வாசனை.

***155-157- அடியார்கள் செய்த பணி.*** பார்வாழ் அமரர்= ஸ்ரீ வைஷ்ணவர். தண்டேந்த=பல்லக்கைத் தண்டு கொண்டு ஏந்த. சீரார் அடியார்கள்=அவ்வப்போது நேரும் கைங்கர யத்தை உகந்து செய்யுமர். தாலச்சீர் வீசனமும=பனை ஓலை யால் வேய்ந்த திருவால வட்டமும; எத்தனை செல்வராயினும் பொன்னரிசி உண்ணுர்களே! கவிகை=கொற்றக் குடை.

மங்கையவர் வண்ண மிடாவிற் பளிங்கதுவும்
பொங்கு புகர்மணியுந் துப்புந்தாம் பூரித்துக்
கையேந்தி முன்செல்லக், கந்திருவக் காரிகையார்
மையேந்து வார்குழலில் வைத்த மணித்தட்டில்
மஞ்சட் பசுங்கிழங்கும் வாசங்கொள் குங்குமமும்
செஞ்சாந்துந் தாங்கிக் கனகத் தகழியிலே
எண்ணெய்ப் பழைய வமுதும், இருங்கடல்வாய்
அண்ணல் படைத்த அருமருந்துந் தாங்கொண்டு
செங்கரும்பும் வெற்றிலையுஞ் செங்கதலித் தீங்கனியும்
தங்கக் கடகத்தில் தாங்கித்தாம் பின்தொடர
மாயா முனிவர் மறைகொண்டு மாமலராள்
சேயாள் கடைநோக்கைத் தாஞேக்கி எங்கெங்கும்
ஆர்ந்து நிரைத்துப் புகழ, அருமறையோர்,

***158-168- பாற்கடலில் உதித்தவளாகையால் வருணன் இவளுக்குப் பிறந்தகத்துச் சீராக அனுப்பியவை.*** *கனுக்குளிக்கும் நாளில் மங்கையர்க்கு அவரவர்களது பிறந்தகத்திலிருந்து சிறப்பு வருவது மரபு. மாசில்=பெருமைக்காகச் செய்வதில்லாமல் தமது நிலை தோற்ற அனுப்பியது மாசின்மையைக் காட்டும். உரகமெழில் மங்கையவர்=அழகிய நாக கன்னிகைகள். பளிங்கு=படிகம். புகர்மணி=சோதியைக் கக்கும் நவமணிகள். துப்பு=பவளம். பூரித்து=நிரப்பி. காரிகையார்=மங்கையர். மை ஏந்து வார்குழலில்=மைபோல் கறுத்துப் பரந்த கூந்தலிலே (குழலின் மேல்). கனகம்=பொன். தகழி=குடம். எண்ணெய்ப் பழையவமுது=கனுக்குளித்த பின்னர் மங்கையர் எண்ணெய்ப் பழையவமுது உண்பது மரபு. இருங்கடல்வாய் அண்ணல்=தன்வந்திரி. அருமருந்து=திருமேனி சோர்வுறு வண்ணங் காக்கும் மருந்து. கடகம்=பெட்டி.*

***169-171- நித்யஸூரிகள் வாழ்த்தியது.*** *மாயா முனிவர்... நித்யஸூரிகள். ஆர்ந்து நிரைத்து=வரிசை வரிசையாக எங்கும் நிறைந்து.*

"சோநது மணிவண்ணன மாாபதனிற வாழந்துயிாகட
கென்று மிரஙகும் அருளுடையாய! இன்னமுதே!
ஒன்று மிருநிதியும முமமூனறும நாலிரண்டும
நலகுந தனிமனத்தாய! நாணமதியின மாண்புடையாய்!
மல்கும் வினையனைததும மாய்பபாயநின தாளபோற்றி,
வெள்ளைபபூம் படடுடுதது வெண்மலாத தாரணிநது
விளஙுங கமல மிசைவந்தாய! தாளபோறறி,
செநதா மரைக்கையாய்! செந்தா மரையடியாய!
செநதா மரைக்கணணீ! செலவீநின தாளபோற்றி,
செநதா மரைக்கொபபூழ்ச செலவன தொழுதேததும்
நந்தா ஒளிவிளககே! நஙகாய்நின தாளபோற்றி,
இன்மை முழுதகறறி இமமைககும் எம்மைககும்
நன்மை உகந்தளிககும் நல்லாயநின் தாள்போற்றி,"

***172-184- மாமறையோர் இவளை ஏத்திய வகை.*** *வாழ்ந்து=பிரிய மனமில்லாதவளாய் "அகலகிலலேன்" என்று எப்போதும் அமர்ந்து. இனனமுதே=இறைவனுக்கும் உயிருக்குமுள்ள தொடர்பு என்றும் மாயாமற் செய்யும் அமுது. ஒன்றும்=பொருந்துகின்ற. இருநிதி=சங்க நிதி, பதம நிதி என்பன. மும்மூன்றும்=ஒன்பது மணியும். நாலிரண்டும=எண் வகையான ஐச்வர்யமும்; நல்கும்=வாரி அளிக்கும். தனி மனததாய்=உனது கடமையெனத் கொடுக்கும் மனமுடையாய்! நாண்மதியின் மாண்புடையாய்=பூர்ண சந்திரன போல் யாவர்க்கும் மகிழ்சசியை விளைவிப்பவளே! விள்ளும=மலர்கின்ற; மலரும்போது ஒப்பற்ற வாசனை வீசும். செந்தா மரைக கையாய்...—இறைவனது திருக்கரங்களும், திருவடிகளும, திருக்கண்களும்போல! ஒருபடியாலும் இறைவனை விடக குறையாத அழகுடைய உறுப்புக்களைக் கொண்ட திருமேனி வாய்ந்தவள். செந்தாமரை. .செல்வன=பிரமன். நந்தா=அணையாத. இன்மை=இல்லாமை (தாரிதர்யம்). இம்மைக்கும்=இப்பிறவியிலும். எமமைக்கும்=எப்பிறவியிலும்.*

என்றார்ப்ப, ஆரணமும், ஆரணத் தின்முடிவும்,
குன்றா நெறிநூலும் கேட்டும் மிகப்பயின்றும்
முற்று மறிந்துயர்ந்த மூதுவர்கள், "மாநிலத்தோர்
உற்ற துயரொடுக்கும் ஒண்ணுதலாய்! நீவாழி,
மூப்பும் பிறப்பிறப்பும் முன்வாட்டக் கன்மத்தால்
ஆப்புண்டு சுற்றத்தாற் சூழ்நிலையால் ஓராமல்
தீநெறியே தாந்தோய்ந்து தம்மைப்பின் னன்குணர்ந்து,
மேனெறியே நாடி மிகவெள்கி நின்னடியே
மேவித்தம் தீமை முழுதும் பகர்ந்தேங்க
வாமக் கரமமைத்து வல்லவன்பால் நின்று,
'மணற்சோற்றிற் கல்லாராய் வாருண்டோ? மண்ணில்

***185-194- அறக் கற்ற மறையோர் ஏத்திய வகை.*** *ஆரணம்=வேதம். ஆரணத்தின் முடிவு=வேதாந்தம். குன்றா நெறிநூலும்=அழியாத சாஸ்த்ரங்கள். மூதுவர்கள்=வயது வந்த பெரியோர்கள். துயர் ஒடுக்கும்=துயரத்தை நாசஞ் செய்யும். ஒண்ணுதலாய்=ஒளி கொண்ட நெற்றியை உடையாய்! முன் வாட்ட=முதற் காரணம் மூப்பு, பிறப்பு. கன்மத்தால்=கர்மம் அடியாக. ஆப்புண்டு=சரீரஸம்பந்தம் பெற்று. சுற்றத்தால், சூழ்நிலையால் - தீ நெறியில் நிற்பதற்கு வேறு காரணம். ஓராமல்=செய்வது யாது என்று ஆராயக்கூடாமையால். தம்மை பின் நன்குணர்ந்து=தாம் இறைவனுக்கு அடிமைகள் என்பதை நன்கு உணர்ந்துகொண்டு. மேல் நெறி=உத்தமமான நெறி. மிக வெள்கி=தாம் முன்பு செய்ததை நினைந்து வெட்கமுற்று. நின்னடியே மேவி=நீ இடக்கையால் காட்டும் திருவடியிலே படிந்து. தீமை=தாம் செய்த தீமைகளை. வாமக் கரம் அமைத்து=அழகிய கையை அஞ்சேல் என்று அமைத்து. வல்லவன்பால்=நாயகனாகிய இறைவனிடம் (நீ குறிக்குங் கோட்டினைத் தாண்டாதவன்). நின்று=காரியம் முடிய நின்று.*

***195-199-பிராட்டி பெருமானுக்கு எடுத்துரைக்கும் விதம்.*** *மணற்சோற்றில்...-மணலே சோறாகக் கொண்டால்,*

பிணிபசியால், துன்பத்தால, பினனுந் தமதெழுந்த
சுறறததால் நட்பதனுல் செய்யா தனசெய்தும்,
உற்றதுணை நீவீரே எனறணையும உறறவாபால
காயுங கதந்தவிரப்பீா' என றனைய கடடுரைதது,
வாயும இடாதன்னை மாயபபாயுன் நாயகனும்
அளளி வரம்பின்றித தானளிககும வணமையினுல
வள்ளல் புருடனெனப் போகொண்டான, வாாகுழலாய !
உனனுழி ஏத மிழைப்பாரும உன்னருளால்
மனனு மகமொழிநது வாழ்வாரால—வானோதம்
மனனன் மகஙமுனனந தானபுரிநத தீமபாலே

*சோற்றில் கல்லைப் பார்த்து அகற்றுவது போல, மணலிலிருந்து கல்லைப் பிரிப்பார் உண்டோ? உயிர்கள செய்யாதன செய்வதற்குக் காரணங்கள மண்ணிற் பிறப்பு, பிணி, துன்பம் இவற்றால் வாட்டம், சுற்றத்தார், நண்பர் இவரால் கலக்கம். உற்றதுணை...—“ இவன பாவஞ் செய்தான். இவனது பாவத்தை நான் பொறுக்கமாட்டேன், நான் வெளியிட்ட சாஸ்த்ரம் இவனுக்கு ப்ரமாணம், இவன் இதன்படி நடக்க வில்லை யாதலால் தண்டனைக்குட்படவேண்டும் ” என்று இறைவன் சொல்ல, பிராட்டி, “நீர் வெளியிட்ட சாஸ்த்ரம் நீர் கருணைக கடல் என்கின்றதே; அது பொய்க்கவோ?” என்பாள். இறைவன், “சாஸ்த்ரம் தண்டிக்கச் சொல்லுகிறதே; நான் என் செய்ய?” என்பான். இவள், “உம்மை அண்டினவரிடம் கருணைகாட்டுவீர் ; மற்றவர்களை சாஸத்ரப்படி தண்டிப்பீர் ” எனபாள். இவ்வாறு இறைவனது சீற்றத்தைத் தணிப்பாள்.*

***200-212-மேலும் மறையோர் கூறுவது.*** *கட்டுரைத்து=மனத்திற் படியுமாறு பரக்க எடுத்துக கூறி வாயும்=வாய்த்துள்ள வரம்பின்றி. வள்ளல் புருடன்=வள்ளல் தனத்தால் புருடன் (புரு ஸுநோதி=அமிதமாக அளிப்பவன்). உன்னுழி=உனனிடம் ஏதம இழைப்பாரும=குற்றஞ் செய்வாரும். மன்னும் அகம்=பொருந்திய (இதுகாறும் சேர்க்கப்பெற்றுப் பொருந்திய) பாவம் வானோர்தம் மன்னன்=இந்திரன்; இவன்*

மின்னின் விரைதந்து மூவுலகுந் தான்திரிய,
வான்சேர் மகவானும் தாயும் முனிவரரும்
தாம்செய் நிலையறியா மல்லகல, மீண்டேகி
உன்னன்பின் தாளிணையில் ஓடிப் படிந்திடவே
உன்னருளால் தான்பிழைத்தான் அன்னவனும் — ஒப்பில்லாப்
பேரருள் பெய்யும் பெருமாட்டீ! பாரோர்தம்
ஆரிடர் தீர்த்துகக்குந் தண்ணளியாய்! நீவாழ்க''
என்றேயுன் பண்பே பலபாடி ஏத்திடவே
குன்ற அருளுடனே கோகனகை ஊர்ந்தனளால்—
பின்னும் வடபாலைப் பந்தரிலே வந்திறங்கி 215
மன்னும் உலகோர்கள் தாம்வாழ, மல்லாரும்
திண்புயத்தான் சேயன் வரையகலஞ் சேர்ந்தென்றும்

*மகன், காகாஸுரன். மின்னின் விரைந்து=மின்னிலும் விரைந்து சென்று. மூவுலகுந் தான் திரிய—த்ரீந்லோகாந் ஸம் பரிக்ரம்ய என்றபடி. மகவான்=இந்திரன். தாயும்=அன்பே வடிவுகொண்ட தாயும். முனிவரரும்=மனனசீலரும் (மனம் போனவாறு செய்யும் ஆற்றல்வாய்ந்தோரும்; வசிட்டர், கௌசிகர் போன்றவரும்). தாம் செய்நிலை அறியாமல் அகல=... உன் அன்பின்=உனது நாயகனுகிய இராமபிரானது. ஓடி= ப்ரஹ்மாஸ்த்ரத்திற்கு அஞ்சி ஓடி. உன்னருளால்தான் பிழைத்தான்—காகத்தினுடைய தலையை இராமனது திருவடிகளை நோக்கிக் கிடத்தினுள் சீதை என்ப. தண்ணளியாய்=கருணை வாய்ந்தவளே!*

214. *கோகனகை=தாமரை மலரில் வந்த பிராட்டி.*

215. *வடபாலை=வடக்கில் அமைந்த.*

***216-219- கனுக் குளித்தலின் நோக்கு.*** *மன்னும் உலகோர்கள்=உலகில் மன்னும் மக்கள். மல் ஆரும் திண்புயத்தான் சேயன்=வலிமிக்க புயங்களையுடைய அழகியான் (மேலைப் பதியான்). வரை அகலம்=மலைபோல் திண்ணிய*

எண்ணிறந்த பலலூழி தான்மனன, இனனுயிரும
வாழ எனையூழி, மஞ்சட் குருததிலையில
மாழை மடநோக குடையார் உடனநிற்பக
கனனற கலந்த அடிசிற் கனியினமும
பொன்னிற பொலியுஞ்சீா ஓதனமும மோதகமும
ஆடைத தயிாகலநத அனனமும செஙகரும்பும
கூடி மிகபபெய்து கொஞசு குதலையளும்
பின்னுஞ சிவிகையிலே பைய வெழுந்தருள
இனனிசை யாண்டு மெழுமப, விசும்பதனில
ஆர்ந்த அமர மகளிர், " அளியத்தாய் !

*மார்பு தான் மன்ன=அவனது மார்பிலே என்றும் இடை யறுது பொருந்த. இன்னுயிரும் எனையூழி வாழ=இவளது உயிர் போன்ற இறைவனும் ஊழிதோறூழி வாழ.*

***219-224-பிராட்டி செய்தது*** *மகளிர் மஞ்சள் இலையிலே பல வகையான அன்னத்தை வைத்துத் தம் கணவரும மக்களும் வாழ்க என்று இறைவனை இறைஞ்சுவர் ; இவ்வாறு செய்தாள் இறைவி. மாழை மடநோக்குடையார் உடன் நிற்ப=மான் போலும் நோக்குடையார் அருகில நிற்ப (தாமும் இவ்வாறு செய்து நிற்ப) கன்னற் கலந்த அடிசில=சர்க்கரைப் பொங் கல் கனி இனமும்=பலவகைக் கனிகள் ; பொன்னில் பொலி யும் ஓதனமும்=பொன்போல் நிறமுள்ள சோறும் (மஞ்சள் பொடி கலந்த சோறு- மங்களமாக வைப்பது). மோதகம்= கொழுக்கட்டை. கூடி மிகப்பெய்து=அருகிலுள்ள மகளிருடன் கூடித் தனனுடைய மனத்திற்கேறப அள்ளி வைத்து.*

***225-247- இதன பிறகு மறுபடியும் பல்லக்கிலே அமர்ந்து, யாவரையும் அருளுடன நோக்கி மெல்லப் பவனி வரும் போது, விசும்பில நிகழ்வது.*** *யாண்டும்=எங்கும, விசும்பி லுங் கூட. ஆர்ந்த அமர மகளிர் - பூமிப் பரப்புப் போலே விண் ணுடு வரையில் வரிசை வரிசையாக நின்றனர் அமரர் ; அமரப் பெண்டிர் இறைவிக்குத் தமது நன்றியை நவின்றனர். அளியத்தாய்=கருணை வாய்ந்தவளே! சோர்வும்...= துயர*

சோர்வுந் துயருந் துடைத்தருளுஞ் சீருடையாய் !
தென்னிலங்கைக் கோமான் சிறைகொள்ள யாமங்கே
மன்னிக் கலங்க வுனதருளால் வாழ்வுற்றோம்''
என்று வணங்கி யியம்பிப், ''பெருமாட்டி !
குன்றுப் பகைகொள்ளுங் கோதுடையார் மாட்டும்
பரிவுடையாய் ! முன்னம் பதின்முகத்தான் முன்னும்
'அரியலன் ஆர்க்கும் அருளும் அனகன்,
அரிய மனம்வாய்ந்தான், அன்னவன்பால் நட்பே
உரியது, செய்க' எனவுரைத்தாய்— உன்பெருமை
செல்வ விபீடணனற் செல்வி எடுத்துரைப்பக்
கொல்லை யரக்கியர் தாமொன்றுங் கோராமல்

*மும் துயரத்தால் விளையும் சோர்வும் நீயாகவே அகற்றும் பண்புடையவளே ! தென்னிலங்கைக் கோமான்=தெற்கு திசை என்றாலே அஞ்சுமாறு கொடுமைகள் கணக்கின்றி இழைத்த இராவணன். சிறைகொள்ள=எங்களைச் சிறையில் வைக்க. யாம் அங்கு மன்னிக் கலங்க=இலங்கையிலே நெடுங் காலம் பொருந்தி நெஞ்சங் கலங்க. வாழ்வுற்றோம்=சிறையி லிருந்து விடுதலை பெற்றோம். பெருமாட்டி=உனக்குத் தீங் கிழைத்தாரிடமும் அருளே செய்து பெருமை கொண்டவளே ! பதின்முகத்தான்=தசமுகன்; இராவணன். அரியலன் யார்க் கும்—இராமன் யார்க்கும் அரி அலன்; ஆர்க்கும் அருளும். அரிய மனம் வாய்ந்தான்=பகைவன் சரணம் புகுந்தாலும் காக்கும் மனம் வாய்ந்தவன். நட்பே உரியது செய்க=நட்புக் கொள்ளுதல் ஏற்றது. இவ்வாறே செய்க (மைத்ரம் ஔபயிகம் கர்த்தும் என்பது பிராட்டியின் வாக்கு). செல்வ விபீடணன் நற்செல்வி=திரிசடை (தான் கண்ட கனவினை அரக்கியர்க்கு எடுத்துரைத்தாள்). கொல்லை அரக்கியர்=கொடிய அரக்கியர் (சொல்லாலுஞ் செயலாலும் பிராட்டியைத் துன்புறுத்தியவர் கள்). தாமொன்றும் கோராமல்—இலங்கை யழிந்து, சானகிப் பிராட்டி இராமனுடன் அயோத்தி செல்லுவதாகத் தான் கண்ட கனவை எடுத்தோதி, இவளைச் சரணமாகப் பற்று*

தாமிருப்ப, ' யானுவன் உஙகட ' கெனபபுகன்று,
வாமக கரமமைதது வாடடங் தணிததுகநதாய;
பினனும் விசயம விளம்பப பெயாநதாஙகே
மனனுங கதஙகொணட வாத மகனபாலே,
' ஈஙகுறைவோா செய்வனதாம ஏதமுமாம் அல்லவுமாம,
ஈங்குலகில தீயன செயயாதாா் தாமுளரோ ?'
எனறே பகா்நதவன்றன சீறறம இறுத்தனையால ;
உனறன் கடைநோககும் ஒபபில் அருள்தானும்
ஊழிபல லூழி உயாந்திடுக'' எனறேதத–
ஆழிக கரததானும் ஆஙகொருபூஞ் சோலையிலே
பாஙகிற படியப், பகாவனதாங கேட்டேமுன
பூஙகொடியைக கானிற் பிரிந்ததனைத் தான்நினைநது

*வோம் என்று திரிசடை எடுத்தோத அரக்கியர்கள் ஒன்றும கூறுதிருக்கும்போதே. யானுவன் உங்கட்கு – " பவேயம் சரணம ஹி வ: " என்றுள் பிராட்டி. வாட்டம்=அரக்கியரது நெஞ்சிலே அப்போது தோனறிய பயத்தை. விரைதந்த= விரைந்துவந்த (இராவண வதத்திற்குப்பின் இராமபிரானது வெற்றியைப் பிராட்டிக்குக் கூற வந்த) மன்னும்கதங்கொண்ட =மனத்தை விட்டு நீங்காத கோபஙகொண்ட(இந்தக் கோபத் தால தான் அரக்கியர்களைக் காலால் மிதிக்க வேண்டும், கையால் பிசையவேண்டும், பற்களால் கடிக்கவேண்டும் என்றுன் அனுமன் ; இவ்வாறு செயதாலும் கதம் நீங்காது போலும்). வாதமகன்=அனுமன். ஈங்குறைவோர்.. — பாபாநாம் வா சுபாநாம் வா வதார்ஹாணும் ப்லவங்கம | கார்யம் கருண மார்யேண ந கச்சிந் நாபராத்யதி || என்பதன் மொழி பெயர்ப்பு. இறுத்தனை=தணித்தனை.*

***248-252-** பெருமான் ஆங்கு விரைந்து வந்தது. ஆழிக் கரததான்=சக்ரபாணி. பாஙகிற் படிய=படிந்து மகிழ பகர்வன=வானில் அமர மகளிர் கூறுவனவற்றை. முன் பூங்கொடியை. .–இராமாவதாரத்திலே பிராட்டியைத் தான்*

ஆராத அன்பதனுல் ஆர்வத்தால் தான்விரைந்து,
சீரார்ந்த பந்தர்முன் சேர்ந்து செயல்மறந்து,
“ ஓதம் எழுந்த அமிழ்தின் உயரணங்கே!
கோதில் கமலத்தில், அம்மலர் தானுகுக்கும்
ஆரமுதில், கோங்கதனில், முல்லை யரும்பதனில்,
சீரணவு வஞ்சிச் செழுங்கொடியில், பாடலத்தின்
செம்மலரில், செவ்விச் சிகிதன்னின் அஞ்சிறையில்,
செம்மை செழுநற் குவளை நறுமலரில்,
பூங்குயிலிற், பேடை எகினத்திற் பூம்பொழிலில்
ஆங்காங்கே நாட்டம் நெடிதமைத்து, நங்காய்நின்
செவ்வி முகமும், தெவிட்டாத தேன்மொழியும்,
நவ்விப் பயோதரமும், நண்ணும் நகைதானும்,
நுண்ணிடையும், செவ்வாயும், கார்குழலும், காதணுகும்
வண்ண விழியும், வளமார் குரலதுவும்

*பிரிந்து, “ அநித்ர : ஸததம் ராம :,” “ ந மாம்ஸம் ராகவோ புங்க்தே ” என்றவாறு உறங்காது, உண்ணாது மனம் வாடியதை நினைந்து. செயல் மறந்து=தான் செய்வதைத் தான் அறியாமல்.*

***253-266-பெருமான் பிராட்டியிடம் பகர்ந்தது.*** *ஓதம்...= பாற்கடலிலிருந்து வெளிவந்த அமுதத்தினும் மேம்பாடுடைய பெண்ணே! இப்பெண்ணமுது தோன்றலால் முதலில் வந்த அமுதமும் கோதாயிற்று. கமலம், அதில் வெளிவரும் அமுதம் முதலியவற்றைக் கண்டபோது பிராட்டியின் திருவுருவும் பேச்சும் குரலும் நடையும் நினைவுக்கு வந்தன. நிரனிறை யணி. கமலம்-முகம், அமுது-தேன்மொழி, கோங்குமலர்-கொங்கை, முல்லை - நகை, வஞ்சிக்கொடி - நுண்ணிடை, பாடலம்-சிவந்த வாய், சிகியின் அஞ்சிறை-கருங்குழல், குவளை மலர்=விழி, பூங்குயில்—குரல், எகினம்-நடை. சிகி=மயில். எகினம்=அன்னம், நாட்டம் நெடிது அமைத்து=ஒவ்வொன்றையும் நெடிது நோக்கி; ஒவ்வோர் உறுப்பினின்றுங் கண்*

மென்னடையும் இன்னனைய கணடேன, மிகுநதனவும
நினனகததே காணபன்" எனபபுகன்று நினறுஙகே
மாமலராள் கண்ணின் மணநோககைத தானமாநத
மாமலராள தானுந்தன வணண விழியாலே
மாயன மலர்ககணணின் வண்ணம மிகப்பருகி
மாயனறன் பாலனறி மனனு முயிாபாலும
நோககப, புவியோரும நூக்கும் இமையோரும,
"யாாககும் இதமளிககும் செயயவளும் செல்விக
கினியவனும யானயான எனபபரிநது முநதி
இனியனவே செயவர்" எனததேறித தாமவாழ்ததக

வாங்கமாட்டாமையாலே ஒவ்வொன்றையும் கூர்ந்துநோக்கி. நவ்வி=அழகிய. பயோதரம்=கொங்கை. இன்னனைய= இவை போலவன பல. மேலனவும்=மற்றவை; இவற்றிலும் மேலானவை (ஆத்ம குணங்கள்).

***267-270 - குளிர்விழி.*** மணநோக்கு=அழகிய நோக்கு, மங்கலமான பார்வை மாந்த=கண்ணால் பருக. மாயன்றன் பாலும் ..–இவளுடைய நோக்கு இறைவன்பாலும் மக்கள் பாலும் சேர்ந்தது

***271-274 - மண்ணவரும் இமையோரும் தம்மனத்துட் சொல்லிக் கொணடது*** நூககும்=நெருங்கியுள்ள. செய்ய வள்=அழகியாள், பிராட்டி. செல்விக்கு=இப்படிப்பட்ட அன்பு ததும்பும் மனமுள்ள இவளுக்கு. இனியவன்=இவள் சொலலும்படி செய்யுமாறு அனபு கொண்டவனும் யான் யான் என=உயிர்களுக்கு அருளசெய்ய நான் முனனே, நான் முன்னே என்று. முந்தி=ஒருவருக்கொருவர் முந்தி. பிரான், பிராட்டி இவாகளது சேர்த்தியின் ஏற்றம். கனகக் கலுழன்=பொன் மேனி வாய்த்த கருடன். கண்ணூர் புரம= மேலுலகங்களும் திரண்டு வந்து அனுபவிக்கக்கூடிய பரப்பை யுடைய பெரு நகரம் ("கண்ணூர் கண்ணபுரம்" என்பது காண்க.) சோதனை=நகர சோதனை.

கண்ணன் கனகக் கலுழ னணைந்தேறி
கண்ணார் புரந்தன்னிற் சோதனைக்காத் தானூர்ந்தான்—
தண்ணுமையுந் தூரியமுங் காகளமுந் தாமொலிப்பப்
பண்ணமர் தேறற் கிளவியர் பண்பாட,
மொய்த்த வரைநெடுவாய் வானிடுமவ் வில்லேபோல்,
மைத்த முகில்கொள்ளும் மின்னதுபோல்—சீர்த்த
மணிச்செப்பில் பொன்னிழைபோல் பூமகளும் ஊர்ந்து,
பணிவினால் நன்னெறியாற் சீலத்தாற் பத்தற்
கணியனாய் வந்த முனிவ னமைத்த
மணியுயர் மண்டபத்திற் பத்தி நடந்தருளிச்
சீரியசிங் காதனத்திற் சேர்ந்து, களைதீர
வேரி மலர்வேய் விதானத்தின் கீழே
நறுநெய்ச் சரவிளக்கின் சோதி பிறங்க,
மருங்கெங்குந் தூபங் கமழ, மடவார்
அருஞ்சுவைக் கீத வமுதம் படர,
நறும்பொழில்வாய்த் தோய்ந்துலவு தென்றல் துளிதூவ,

***277-284-மண்டபத்தில் பத்தி உலாவுதல்.*** பண்ணமர் தேறல் கிளவியர்=இசையோடு பொருந்தும் தீஞ்சொல்லை உடைய மங்கையார், பிராட்டியுங் கேட்டு வியக்கும் இனிமை, மொய்த்து...—சுற்றிலும் அமைந்த மண்டபத்தின் நடுவில் பிராட்டி எழுந்தருள்வது மலைக்கூட்டத்தின் நடுவில் எழும் இந்திரவில் போன்றது. மைத்து=கறுத்து. முகில்=மேகம். சீர்த்து=அழகிய. மணிச் செப்பில்=மணிமயமான செப்பில். பூமகள்=பிராட்டி. பணிவு, ஒழுக்கம், சீலம், பத்தற்கு அணியனாய் (எளியனாய்) இருத்தல் முனிவனது குணங்கள்; இம்முனிவர் திருப்பதி பெரிய ஜீயர் திருவேங்கட ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி; இம்மண்டபத்தை நிறுவியவர்.

***285-294-சிங்காதனம் சேர்ந்து வீற்றிருத்தல்.*** சீரிய=மேன்மையுள்ள, வேரி மலர் வேய்...=பிராட்டி அமரும் இடமாதலால் விதானம், மணம்வாய்ந்த மலர்களால் அமைந்துள்ளது,

சூழும் பொழிலவாய சுரும்புங குயிலினமும
யாழி னிசையொலிபப, யாண்டுந திரண்டெழுந்த
மண்ணவாதாம் வாழ்தத மகிழ்நதனளால, தானேற்றுக
கணணபுரத தாயாா கனு.

பிறங்க=எங்கும் பரவ. மருங்கெங்கும்=பககம முழுதும். சோதி-கண்ணுக்கு விருந்து, தூபம்-மூக்கிற்கு, கீதம்-செவிக்கு, தென்றல் துளி—உடலுககு. யாழ்=வீணை சுரும்பு=வண்டு. கண்ணபுரத் தாயார், தான் கனு ஏற்று, மண்ணவர்தாம் வாழ்த்த மகிழ்ந்தனள ஆல் என்றியைக்க